15th December 1961]

SRI K. ANBAZHAGAN : தலைவர் அவர்களே, உப்பு விலை 6 காசிலிருந்து 16 காசு அளவுக்கு உயர்ந்திருக்கிறது. ஏறத்தாழ 2½ மடங்கு விலை உயர்ந்திருக்கிறது. இது நியாயம் என்று அமைச்சர் அவர்கள் கருதுகிறார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : நியாயம் என்று சொல்லுவதற்கில்லை. விலை உயருகிறது என்றால், பல காரணங் களினால் உயருகிறது. அதைக்குறைப்பதற்கு வேண்டிய வழிகளை யெல்லாம் செய்து கொண்டிருக்கிறோம். அதை விட்டுவிட்டு இப்பொழுது தனியாகச் சொன்னால், உப்பு எவ்வளவு குறைவாக சாப்பிடுகிறோமோ அந்த அளவுக்கு உடம்புக்கு நல்லது. (சிரிப்பு).

SRI T. S. RAMASWAMI : உப்பு விலை அதிகமாகிக்கொண்டு வருவதை தவிர்ப்பதற்காக பல இடங்களில் சும்மாக் கிடக்கும் நிலங்களை உப்பு உற்பத்திக்காக பாட்டத்திற்கோ அல்லது குத்த கைக்கோ கொடுப்பதற்கு அரசாங்கம் முன் வருமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இது நிலம் அதிகமாக இல்லாததனால் ஏற்படவில்லை. 'லேபர்' வேலை செய்பவர்களுக்கு கூலி அதிகம், மற்றவைகளும் அதிகமாக இருப்பதினால்.

*Minor ports*

* 2400 *Q.*—SRI M. S. SELVARAJAN : Will the Hon. the Minister for Works be pleased to state the ports proposed to be improved as minor ports during the Third Plan period ?

THE HON. SRI P. KAKKAN : The ports proposed to be improved during the Third Plan period are Cuddalore, Nagapattinam, Tuticorin, Colachel, Kilakarai and Pamban.

SRI M. S. SELVARAJAN : திருநெல்வேலி ஜில்லாவிலுள்ள குலசேகரப்பட்டணம் போர்டு ஏற்கனவே பல காலம் போக்கு வரத்து வசதி உள்ளதாக இருந்தது. சமீபத்தில் அந்த ஜில்லாவில் இலங்கை கரையிலிருந்து திரும்பி வந்தவர்கள் அந்தப் பகுதியில் பல்லாயிரம் பேர் இருப்பதன் காரணமாகவும், அங்கு ஏற்றுமதிக்குரிய சிறு தொழில்கள் விருத்தி அடைந்திருப்பதன் காரணமாகவும், அந்தத் துறைமுகத்தையும் இந்தத் திட்டத்திலே முன்பாத்தியதை வழங்கி, சேர்ப்பதற்கு அரசாங்கம் ஏற்பாடு செய்யுமா ?

THE HON. SRI P. KAKKAN : போர்ட்ஸ் கமிட்டி ஒரு ரிபோர்ட்டு சமர்ப்பித்திருக்கிறது. அதை அனுசரித்துத்தான் அரசாங்கம் இவைகளை எடுத்துக்கொண்டிருக்கிறது. குலசேகரப் பட்டிணத்தில் 'போர்ட்டு இம்ப்ரூவ்மெண்டு கமிட்டி' ஒன்று 'பாரம்' பண்ணி, நல்ல முறையில் ஆராய்ச்சி செய்து, இதை யெல்லாம் எடுத்த பிற்பாடு. அதையும் பின்னால் எடுத்துக் கொள்ளலாம்.